REGD No. TN MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone: 812818 | 4 பக்கம் [illegible]

**பெருமை**

பெருமை என்றால் உயிரும் கொடுத்துப் பெறுவதுதான் பழந் தமிழ்ப் பண்பாடு. அந்தப் பண்பாட்டைக் காப்பதில்தான் நம் பெருமை இருக்கிறது.

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**ஆட்சியாளர்**

பொது மக்களின் வாழ்த்து பலத்தாலேயே ஆட்சியாளர்களுடைய ஆட்சி நிலைத்து நிற்கும் மக்களின் ஊழியர்களாகவே அவர்கள் விளங்க வேண்டும்.

அண்ணல் காந்தி

மலர்: 3 | சென்னை 30—7—1979 திங்கள் | வெளியூர் 31--7--1979 செவ்வாய் | இதழ்: 282

## சினிமா தியேட்டர் விபத்து:

# தூத்துக்குடிக்கு முதல்வர் விரைகிறார்

**சென்னை, ஜூலை 30- தூத்துக்குடி தியேட்டரில் நடந்த தீவிபத்தையொட்டி, அங்கு நேரில் சென்று இறந்தோர் குடும்பத்துக்கு ஆறுதல் கூறவும் பாதிக்கப்பட்டவர்களுக்கான உதவிப்பணிகளைத் தீவிரப்படுத்தவும் புரட்சித்தலைவர் தூத்துக்குடி செல்கிறார். அவருடன் அமைச்சர் எட்மண்ட் செல்கிறார்.**

தூத்துக்குடியில் உள்ள லட்சுமி டூரிங் சினிமா கொட்டகையில் நேற்று மேட்னி காட்சி நடக்கும் போது பயங்கர தீவிபத்து ஏற்பட்டது.

நூற்றுக்கு மேற்பட்டவர்கள் தீயில் வெந்து துடிதுடித்து இறந்தனர்.

சம்பவம் பற்றி கேள்விப்பட்டதும் முதல்வர் புரட்சித் தலைவர் பெரிதும் துயருற்றார்.

பாதிக்கப்பட்டோர் குடும்பங்களுக்கு எல்லா உதவிகளையும்செய்ய புரட்சித் தலைவர் உத்தரவிட்டார்.

மதுரை மாவட்ட சுற்றுப்பயணத்திலிருந்த அமைச்சர் ராஜாமுகமதுவை தூத்துக்குடிக்குச் செல்லுமாறு புரட்சித்தலைவர் கூறினார்.

அதைத் தொடர்ந்து ராஜாமுகமது தூத்துக்குடிக்குச் சென்றுள்ளார்.

### விசாரணை

சினிமாக் கொட்டகையில் ஏற்பட்ட கொடியச் சம்பவம் விபத்தா! நாச வேலையா? என்று கண்டறிய விசாரணை நடத்துமாறும் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார். அதன்படி உயர்அதிகாரிகள் அங்கு விரைந்து சென்று விசாரணை நடத்துகிறார்கள்.

### முதல்வர் செல்கிறார்

முதல்வர் புரட்சித் தலைவர் இன்று மாலை தூத்துக்குடிக்குச் செல்கிறார்.

புரட்சித் தலைவருடன் உணவு அமைச்சர் எட்மண்ட் செல்கிறார்.

சம்பவம் நடந்த இடத்துக்குச் சென்று சம்பவம் பற்றி புரட்சித்தலைவர் விசாரித்தறிவார்.

இறந்தவர்கள் குடும்பத்துக்கும், மருத்துவமனையில் சிகிச்சை பெறுகிறவர்களுக்கும் உதவிகள் வழங்கும் பணியையும் புரட்சித் தலைவர் துரிதப்படுத்துவார்.

## இந்திரா-ஜகஜீவன் சந்திப்பு

புதுடெல்லி, ஜூலை 30- விரைவில் மக்களவையைக் கூட்டி பெரும்பான்மையை பிரதமர் சரண்சிங் நிரூபிக்கவேண்டும் என்று ஜெகஜீவன்ராம் கோரியுள்ளார்.

எதிர்க்கட்சித்தலைவரான ஜெகஜீவன் நேற்று செய்தியாளர்களைச் சந்தித்தார்.

அவர் கூறியதாவது:-

"சரண்சிங்கின் மொத்த பலம் 262 என்று கூறப்படுகிறது. இ. காங்கிரஸ் எம்.பிக்கள் 72 பேரின் ஆதரவு வாபஸ் ஆகிவிட்டால் சரண்சிங்குக்கு 190 பேரின் ஆதரவு மட்டுமே இருக்கும்.

அத்தகைய மைனாரிட்டி அரசு நீடிப்பது சரியல்ல" என்றார் ஜெகஜீவன்.

இ. காங்கிரஸ் ஆதரவு தந்தால் நீங்கள் ஏற்பீர்களா? என்ற கேள்விக்கு ஊகங்களின் அடிப்படையில் பதில் சொல்ல முடியாது என்றார் ஜகஜீவன்.

நிருபர்: இந்திரா காந்தியை சந்திப்பீர்களா?

ஜகஜீவன்: சந்திப்பேன்.

### *ராஜினாமாவா? சுவரண்சிங் மறுப்பு

புதுடெல்லி, ஜூலை 30- சுவரண்சிங் காங்கிரஸ் தலைவர் சுவரண்சிங் கட்சித் தலைவர் பதவியை ராஜினாமாச் செய்துவிட்டதாக நேற்று (ஞாயிறு) பிற்பகல் ஒருமணிக்கு ஆங்கிலச் செய்தி அறிவிப்பில் "வானொலி" அறிவித்தது.

"வானொலி"யின் இந்த அறிவிப்பு தவறானது; விஷமத்தனமானது என்று சுவரண்சிங் அறிவித்துள்ளார்.

### *சென்னையில் தடை உத்தரவு

சென்னை, ஜூலை 30- சென்னை நகரில் நேற்று (29ந்தேதி) மாலை 6மணியிலிருந்து போலீஸ் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்தத் தடை உத்தரவு வருகிற 13-ந் தேதி மாலை 6 மணிவரை தொடர்ந்து அமலில் இருக்கும்.

## சரண்சிங் மந்திரிசபை விஸ்தரிப்பு

# 18 மந்திரிகள் பதவி ஏற்பு

**புதுடெல்லி, ஜூலை 30- மத்திய அமைச்சரவையில் மேலும் 18 பேர் அமைச்சர்களாக இன்று (திங்கட்கிழமை) பகல் 1-15 மணிக்கு பதவி ஏற்றார்கள்.**

இவர்களில் 10 பேர் காபினெட் அந்தஸ்துள்ள அமைச்சர்கள் ஆவார்கள். மற்ற எட்டு பேர் துணை (ராஜாங்க) மந்திரிகளாகப் பதவி ஏற்றார்கள். இவர்களுடன் சேர்த்து மத்திய அமைச்சரவையில் 27 பேர் இடம் பெற்றுள்ளனர்.

மந்திரிசபையில் சேருவது பற்றி சுவரண்சிங் காங்கிரஸ் கட்சியில் நிலவி வந்த குழப்பங்கள் ஒருவாறாகத் தீர்ந்தன.

புதிதாக இன்று 18 அமைச்சர்கள் பகல் 1.15 மணிக்கு பதவிஏற்றார்கள்.

இவர்கள் அனைவருக்கும் ஜனாதிபதி ரெட்டி பதவிப் பிரமாணமும் ரகசியக் காப்புப் பிரமாணமும் செய்து வைத்தார்.

இந்தப் பதினெட்டுப் பேரையும் அமைச்சர்களாக்குமாறு பிரதமர் சரண்சிங் இன்று காலை ஜனாதிபதி ரெட்டிக்கு சிபாரிசு செய்தார். அதை ஜனாதிபதி ஏற்றுக்கொண்டார்.

### காபினெட் மந்திரிகள்

காபினெட் அந்தஸ்து அமைச்சர்களாக இன்று பதவி ஏற்றவர்கள் விவரம் வருமாறு:-

நீதிபதி எச், ஆர். கன்னா, கே. பிரும்மானந்த ரெட்டி, சி. சுப்பிரமணியம், இதேந்திர தேசாய், டி. ஏ. பை, சவுத்திரி பிரும்மபிரகாஷ், டாக்டர் கரன் சிங், கே. சி. பந்த், பஸலுர் ரஹ்மான், முகமது ஷபி குரேஷி.

### துணை மந்திரிகள்

ராஜாங்க மந்திரிகளாக இன்று பதவி ஏற்றவர்கள் விவரம் வருமாறு-,

ஞானேஸ்வரர் மிஸ்ரா, பானுபிரதாப்சிங், ஜக்பீர் சிங், நர்சிங், டி. எல். மண்டல், டி.எஸ்.ஷாரங்கரே, ஹென்றி ஆஸ்டின், திருமதி ரஷிதாஹக்சவுத்திரி.

தமது அமைச்சரவையில் 21 பேர்தான் காபினெட் அந்தஸ்துள்ள அமைச்சர்களாக இருப்பார்கள் என்று பிரதமர் சரண்சிங் ஏற்கனவே அறிவித்து இருக்கிறார்.

இம்மாதம் 28ஆம் தேதி காபினெட் அந்தஸ்து உள்ள அமைச்சர்களாக 8 பேர் பதவி ஏற்றனர். இன்று 10பேர் காபினெட் அமைச்சர்களாகப்பதவி ஏற்றுக் கொண்டுள்ளனர். பிரதமர் சரண்சிங்கையும் சேர்த்து இதுவரை காபினெட் அந்தஸ்து உள்ள அமைச்சர்கள் 19 பேர் ஆகிறார்கள்.

துணை அமைச்சர்களையும் சேர்த்து மத்திய அமைச்சரவையில் பிரதமர் உட்பட 27 பேர் இருக்கின்றனர்.

### உ.பி. முதல்வர் கட்சி மாறினார்

லக்னோ, ஜூலை 30-உத்தரப்பிரதேச மாநிலமுதல்வர் பனார்சிதாஸ் குப்தா ஜனதாக் கட்சியிலிருந்து விலகினார். ராஜ்நாராயணன் தலைமையில் உள்ள ஜனதா (எஸ்) கட்சியில் அவர் சேர்ந்திருக்கிறார்.

ஜனதாக் கட்சி இரண்டாகப் பிரிந்ததையொட்டி சில மாநில அரசுகளுக்கு சிக்கல் ஏற்பட்டுள்ளது.

### மந்திரிகள் பட்டியல்

1. சரண்சிங் (பிரதமர்)
2. சவான் (துணைப் பிரதமர்)
3. எஸ். என். மிஸ்ரா
4. பட்நாயக்
5. எச். என். பகுகுணா
6. ஜுல்பிகருல்லா
7. ரபிராய்
8. ராம்கிங்கர்
9. புருஷோத்தம்லால் கவுசிக்
10. நீதிபதி எச். ஆர். கன்னா
11. கே. பிரும்மானந்த ரெட்டி
12. சி. சுப்பிரமணியம்,
13. இதேந்திரதேசாய்
14. டி. ஏ. பை.
15. சவுத்திரிபிரும்ம பிரகாஷ்.
16. டாக்டர் கரன்சிங்.
17. கே. சி. பந்த்
18. பஸலுர் ரஹ்மான்
19. முகமது ஷபிகுரேஷி

### ராஜாங்க மந்திரிகள்

20. ஞானேஸ்வர் மிஸ்ரா
21. பானு பிரதாப்சிங்
22. ஜக்பீர்சிங்
23. நர்சிங்
24. டி.எல்.மண்டல்
25. டி. எஸ். ஷாரங்கரே
26. ஹென்றி ஆஸ்டின்
27. திருமதி ரஷிதா ஹக் சவுத்திரி.

### அகாலிதள தலைவர் மரணம்

சண்டிகார், ஜூலை 30- அகாலிதளக் கட்சியின் முன்னாள் தலைவர் மோகன் சிங்தூர் எம். பி. மாரடைப்பால் இன்று மரணம் அடைந்தார். அவருக்கு வயது 60.

★ இது மைனரிட்டியான காபந்து அரசு

★ கொள்கை முடிவு எடுக்க இதற்கு உரிமை இல்லை

# சரண்சிங் மந்திரி சபையை கவிழ்த்தே தீருவேன்

## ஜெகஜீவன் சபதம்

**புதுடெல்லி, ஜூலை 30-சரண்சிங்கின் அரசு பெரும்பான்மையற்ற மைனாரிட்டி அரசு. இது ஒரு இடைக்கால சர்க்கார் மாதிரிதான். இந்த அரசுக்கு கொள்கை முடிவுகள் எடுக்க உரிமை இல்லை. இந்த அரசை இறக்கிக் காட்டுவேன் என்று ஜெகஜீவன்ராம் கூறினார்.**

நாடாளுமன்ற எதிர்க்கட்சித்தலைவர் ஜெகஜீவன்ராம் நேற்று ரேடியோவிலும், டெலிவிஷனிலும் பேசினார்.

அவர் கூறியதாவது:-

தற்போதுள்ள மத்திய அரசு மைனாரிட்டி அரசு. இது காபந்து சர்க்காராகும்.

இந்த மைனாரிட்டி அரசு எந்த கொள்கை முடிவுகளையும் எடுக்க முடியாது.

இதன் மைனாரிட்டி தன்மைகளையும் முரண்பாடுகளையும் நாம் ஆரம்பத்திலேயே- மந்திரிசபை அமைக்கும் போது காண முடிந்தது. உள் விவகாரங்கள் காரணமாக நொறுங்குவதன் அறிகுறி இவை.

இந்த அரசை தோற்கடிப்போம். அதன்பிறகு தேர்தல் நடத்தப்படாது. பிரதானஎதிர்க்கட்சியான ஜனதா அழைக்கப்படும். நாங்கள் ஸ்திரமான அரசை அமைப்போம்.

தொழில் துறைவளர்ச்சி பிரச்னைகள் பற்றியோ, 6வது திட்டம் பற்றியோ பிரதமர் தமது வானொலி உரையில் குறிப்பிடவில்லை.

புதியஅரசுவேலை இல்லா திண்டாட்டத்தையும் லஞ்ச ஊழலையும் ஒழிக்கும் என்று பிரதமர் கூறினார்.

ஆனால்அந்தசாத்யமான நடவடிக்கைகள் யாவை என்று கூறவில்லை. எதிர்க்கட்சித் தலைவராகிய நான், மக்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகள் மீறப்பட அனுமதிக்கமாட்டேன்.

நில உச்சவரம்பு, விவசாயப் பொருட்கள் விலை வாசி, விவசாயத் தொழிலாளர் ஊதியம் பற்றி எதுவும் பிரதமர் உரையில் குறிப்பிடப்படவில்லை.

புதிய அரசிடம் நாட்டின் பிரச்சினையை சமாளிக்கக்கூடிய கொள்கை இல்லை. நாட்டின் அரசியல் நிலவரம் மோசமான நிலையில் உள்ளது. மைனாரிட்டித் தன்மையுடன் உள் தகராறுகள் கொண்ட கோஷ்டியிடம் நாட்டின் எதிர்காலத்தை விட்டுவிடக்கூடாது.

பதவிக்கு வர ஒரு கோஷ்டியினர் எல்லா முயற்சியையும் எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொண்டார்கள். பதவிக்கும் வந்துவிட்டார்கள். அவர்களுக்கு இப்போது என்ன செய்வது என்று புரியவில்லை.

இவ்வாறு ஜெகஜீவன்ராம் கூறினார்.

பேசின் பிரிட்ஜ் விபத்து

### நாசவேலையா? விசாரணைக்கு அரசு உத்தரவு

சென்னை, ஜூலை 30- பேசின் பிரிட்ஜ் மின்நிலைய விபத்தில் மூவர் இறந்தனர். இந்த விபத்துக்கு நாசவேலை காரணமா என்பதைக்கண்டறிய நெய்வேலி தலைமை மின் பொறியாளராக இருந்து ஓய்வுபெற்ற எம். அன்வர் விசாரணை நடத்துவார். இத்தகவலை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் இன்றுஅறிவித்தார்.

தொழிற்சாலை ஆய்வுஅதிகாரியும அங்கு சென்று விசாரணை நடத்துவார் என்று அவர் கூறினார்.

வெடி மருந்து நிபுணரும் ஆய்வு நடத்த இருக்கிறார். மின் நிலைய பாய்லர் வெடிக்கவில்லை.

தற்போதுபணிகள் நடக்கின்றன. இறந்தவர்கள் குடும்பத்தினருக்கு மின் வாரியத்தில் வேலை தர நடவடிக்கை எடுக்கப்படும் என்று அமைச்சர் பண்ருட்டி கூறினார்.

மாவட்ட தலைநகர்களிலும்

# இரவுநேர பஸ் வசதி

## பொன்னையன் அறிவிப்பு

**கோவை, ஜூலை 30- தமிழ்நாட்டின் எல்லா மாவட்ட தலைநகர்களிலும் இரவு நேரங்களில் பஸ் போக்குவரத்து வசதி செய்து தரப்படும் என்று அமைச்சர் பொன்னையன் அறிவித்தார்**

கோவையில் இரவு நேர பஸ் போக்குவரத்து துவக்கவிழா நேற்று (ஞாயிற்றுக்கிழமை) மாலை நடைபெற்றது.

இதன் துவக்கவிழாவுக்கு போக்குவரத்து அமைச்சரின் பேரவைச் செயலா ப. கோ. கிட்டு தலைமை வகித்தார்.

கோவையில் இரவு நேர பஸ்போக்குவரத்தைதமிழ்நாடு போக்கு வரத்துத் துறை அமைச்சர்சி.பொன்னையன் துவக்கி வைத்து பேசியதாவது:

"வளர்ந்து விட்ட கோவை போன்ற நகரங்களில் இதுபோன்ற இரவுநேரபேருந்து மிகவும் இன்றியமையாததாக

(2-ம் பக்கம் பார்க்க)

# பேசின்பிரிட்ஜ் அனல் மின் நிலையத்தில் விபத்து: 3 பேர் பலி

**சென்னை, ஜூலை 30 பேசின் பிரிட்ஜ் அனல் மின் நிலைய மின் உலையிலிருந்து திடீரென கிளம்பிய தீயினால் தாக்கப்பட்டு 3 பேர் மரணமடைந்தனர். 6 பேர் தீப் புண்களுடன் சிகிச்சை பெற்று வருகின்றனர்.**

பேசின் பிரிட்ஜ் அனல் மின் நிலயத்தில் நிலக்கரியை எரிபொருளாக கொண்டு மின்சார உற்பத்தி செய்யப்படுகிறது.

நிலக்கரியை எரிக்கும் பாய்லர் பகுதியில் திடீரென்று தீஜ்வாலைகள் வெளிக்கிளம்பியதில் 9 தொழிலாளர்களுக்கு முகம். மார்பு, கால்கை ஆகிய இடங்களில் கடுமையான தீக் காயங்கள் ஏற்பட்டன.

திடீரென தீப்பிடிக்கும் தன்மை கொண்ட வாயு நிலக்கரியில் கலந்திருக்கக் கூடும் என்று சந்தேகிக்கப் படுகிறது.

இந்த விபத்தினால் கருவிகளுக்கு சேதம் எதுவும் ஏற்படவில்லை என்று கூறப்படுகிறது.

தீவிபத்தில் பாதிக்கப் பட்ட தொழிலாளர்கள் ஸ்டான்லி மருத்துவமனையில்அனுமதிக்கப்பட்டனர்

இவர்களில் காலடிப் பேட்டையைச் சேர்ந்த தேவராஜ், வியாசர்பாடி நாகன் மற்றும் ஒருவரும் மருத்துவ மனையிலேயே மரணமடைந்தனர்.

மற்றவர்களின் உடல் நிலை கவலைக்கிடமாக உள்ளது.

சூளையைசேர்ந்தபாண்டுரங்கன் (வயது 29) வியாசர்பாடி வெங்கடேசன் (35) ஆனந்தன் (24)மெய்யப்பன் (25) ஜயஅரசன் (30) ஏ. வி. சந்திரன் (21) புளியந்தோப்பு சீதாபதி (32) ஆகியோர் படுகாயமடைந்தவர்களாவர்.

இந்த விபத்தை அடுத்து இரு மின் உற்பத்தி நிலையங்களில் மின் உற்பத்தி நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது; விபத்துக்கான காரணத்தை கண்டுபிடிப்பதற்காக உற்பத்தி நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது.

## அமைச்சர் ராகவானந்தம் ஆறுதல்

தொழிலாளர்நல அமைச்சர் எஸ். ராகவானந்தம் நேற்று இரவு 8 மணி அளவில், பேசின் பிரிட்ஜ் பாய்லர் வெடித்ததால் பாதிக்கப்பட்டு ஸ்டான்லி மருத்துவமனையில் அனுமதிககப்பட்டுள்ள தொழிலாளர்களை நேரில் சென்று பார்த்து,ஆறுதல்கூறினார். வில்லிவாக்கம் தொகுதி அமைப்பாளர் ஜார்ஜ். மற்றும் கழகத் தோழர்கள் உடன் சென்றிருந்தனர்.

## சைக்கிள் ரிக்ஷா-பஸ் மோதல்: இருவர் மரணம்

சென்னை, ஜூலை 30- சென்னையில் நடந்த சைக்கிள் ரிக்ஷா-பஸ் மோதலில் இரண்டுபேர்மரணமடைந்தனர். மேலும் இருவர் படுகாயம் அடைந்தனர்.

புது வண்ணாரப்பேட்டையில் உள்ள செரியன் நகர், சூரியநாராயண செட்டித் தெருவில் இந்த விபத்து நடந்தது.

சிங்காரம் என்பவர்ஓட்டி வந்த சைக்கிள் ரிக்ஷாவின் பின்னால் 56 எச் என்ற எண்ணுள்ள பல்லவன் விரைவுப் பேருந்து வந்து கொண்டிருந்ததாம். திடீரென்று பஸ் சைக்கிள் ரிக்ஷா மீது மோதியதாகக் கூறப்படுகிறது. இந்த மோதலினால் 200 அடி தூரத்திற்கு சைக்கிள் ரிக்ஷாவை பஸ் இழுத்துக் கொண்டு சென்றதாம். ரிக்ஷாஓட்டி சிங்காரம், பயணியான அஞ்சலை அம்மாள் ஆகியோர் மீது பஸ் ஏறியது. அந்த இடத்திலேயே நசுங்கி இருவரும் மாண்டனர். ரிக்ஷாவில் இருந்த மரகதம், ஜானகி ஆகியோருக்கு பலத்த காயங்கள் ஏற்பட்டன. இவர்கள் மருத்துவமனையில் தங்கி சிகிச்சைபெற்றுக்கொண்டு வருகின்றனர்.

இருக்கும் என்று கூறப்படுகிறது.

இந்த விபத்து காரணமாக இந்தப் பகுதியில் சிறிதுநேரம் போக்குவரத்து தடைபட்டது.

பஸ் டிரைவர் பார்த்தசாரதி (வயது 40) கைது செய்யப்பட்டு பின்னர் ஜாமீனில் விடப்பட்டார்.

போக்கு வரத்து இன்ஸ்பெக்டர் பத்மநாபன் இந்த விபத்து குறித்து மேலும் புலன் விசாரித்து வருகிறார்.

### பஸ் தீக்கிரை

இந்த விபத்தைக்கண்ட கும்பல் ஒன்று ஆத்திரம் அடைந்து பஸ் மீது கற்களை வீசி தீ வைத்தது. தீயணைக்கும் படையினர் அந்த இடத்திற்கு விரைந்து வந்து தீயை அணைத்தனர்.

பக்கவாட்டிலிருந்தசந்து ஒன்றில் இருந்து சைக்கிள் ரிக்ஷா திடீரெனவந்ததாகவும், இதனால் பஸ் டிரைவருக்கு நிலை தடுமாறியதாகவும்இதன்காரணமாக விபத்து ஏற்பட்டதாகவும் பல்லவன்போக்குவரத்துக் கழகம் சார்பில் கூறப்படுகிறது.

பஸ்ஸின் ஆறு புதிய டயர்களில் ஐந்து டயர்கள் தீயில் எரிந்து விட்டன. இவற்றின் சேதம் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல்

## பாக்கூர் சுப்பிரமணியம் வானொலியில் பேசுகிறார்

சென்னை, ஜூலை 30- சென்னை செங்கற்பட்டு மாவட்ட கூட்டுறவு பால் விற்பனை ஒன்றியத்தலைவர் பாக்கூர் சுப்பிரமணியம் எம். எல். ஏ. வரும் ஆகஸ்டு முதல்தேதி வானொலியில் பேசுகிறார்.

1-8-79 அன்று காலை 7-30 மணிக்கு'பால்வளம்' என்ற தலைப்பில் வானொலியில் பேசுகிறார். இதனை சென்னை வானொலியின் இரண்டு அலைவரிசைகளிலும் கேட்கலாம்.

## அமைச்சர் பொன்னையன் அறிவிப்பு

(முதற்பக்கத் தொடர்ச்சி)

தேவைப்படுகிறது.

இந்த நோக்கத்தில் தான் சென்னை போன்ற பெருநகரங்களில் இரவு நேரப் பேருந்துகள் ஏற்கனவே துவக்கப்பட்டன. மாவட்ட அளவில் சென்னைக்கு அடுத்து இரண்டாவதாக கோவையிலும், இந்தஇரவுநேரப் பேருந்து விடப்படுகிறது.

இந்த இரவு நேரப் பேருந்து, இதர மாவட்டங்களுக்கும் விரிவுபடுத்துவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

சோதனை அடிப்படையில் விடப்படும் இந்த இரவு நேரப் பேருந்து தேவைக்கு ஏற்ப அதிகரிக்கப்படும்.

இந்த இரவு நேரப் பேருந்தைநகர்ப்புறங்களில் துவக்கி வைக்கும் நாம் நாடு விடுதலையடைந்து 31 ஆண்டுகளாகியும் கிராமப்புற மக்களுக்கு - பகல்நேர போக்குவரத்து வசதிகள்கூட செய்துதரத் தவறி விட்டோம்.

30 சதவிகித நகர்ப்புற மக்களுக்கு பல்வேறு போக்குவரத்து வசதிகளை செய்து கொண்டிருக்கும் நாம் நாட்டின் அச்சாணியாகத் - திகழும் 70 சதவிகித கிராமப்புற மக்களுக்கு செய்யத் தவறி விட்டோம்.

முந்தைய அரசு மறந்த தைபோல கிராமப்புற மக்களை நாம் மறந்து விடவில்லை.

ஒவ்வொரு ஆட்டோ ரிக்ஷாவிலும்வேகக்கட்டுப்பாடு கருவி (கவர்னர்) பொருத்தப்பட வேண்டும். இக்கருவி பொருத்தப்படாத ஆட்டோ ரிக்ஷாவிற்கு இனிமேல் அனுமதி வழங்கப்படமாட்டாது.இதைத் தவிர ஆட்டோ ரிக்ஷாவில் பயணிகள் பயணம் செய்ய தகுந்தவாறு வலது புறம் இறங்காதவகையில் அடைத்து விடவேண்டும்.

இவ்வாறு போக்குவரத்துத் துறை அமைச்சர் பொன்னையன் பேசினார்.

## அமைச்சர் பொன்னையன் நிகழ்ச்சிகள்

ஆகஸ்ட் 1-ந்தேதி காலை 5-50 மணி சேலம், 9 மணி ஆத்தூர் காந்திசிலைதிறப்பு 10 மணி ராசிபுரம்தாலுகா அலுவலகத்தில் 600 பேருக்கு பட்டா வழங்கும் விழா, நாமகிரிப்பேட்டை குடி தண்ணீர்த் தொட்டிக்கு அடிக்கல் நாட்டு விழா, யுனைடெட் கமர்ஷியல் வங்கி மூலம் விவசாயிகளுக்கு கடனுதவி வழங்குவிழா, பிற்பகல் 12.30 மணி தண்ணீர் பந்தல் காடு, 1 மணிமெட்டாலா, மாலை 3 மணி ஒன்பதாம் பாலிகாடு, 3.45 மணி பிலிப்பாக்குட்டை, 4 மணி முள்ளுக்குறிச்சி, 5.15 மணி கரியாம்பட்டி, 5.30 மணி உரம்பு, 6.30 மணி ஈஸ்வரமூர்த்தி பாளையம், 7.45 மணி மங்களபுரம், இரவு 8.30 மணி நாமகிரி பேட்டை பொதுக்கூட்டம்.



# புரட்சிதலைவர் ஆட்சியில் பெண்களுக்கு அதிக வேலை வாய்ப்பு: பி.டி.எஸ் பெருமிதம்

**நாகர்கோவில், ஜூலை 30- எந்த அரசிலும் இல்லாத அளவில் புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் பெண்களின் வேலைவாய்ப்பை பெருக்கும் வகையில் 25 லட்சம் ரூபாய் ஒதுக்கியுள்ளார் என்று அமைச்சர் பி. டி. எஸ் பெருமிதத்துடன் கூறினார்.**

நாகர்கோவில் நகரில் சமூகநல இலாகா சார்பில் நடைபெற்ற விழாவில் அமைச்சர் பி. டி. எஸ். பங்கேற்று சிறப்புரையாற்றினார்.

விழாவுக்கு மாவட்ட ஆட்சித் தலைவர் துரை. சுந்தரேசன் தலைமை வகித்தார். திருமதி விமலா மனோகரன் வரவேற்புரை நிகழ்த்தினார்.

ஆதரவற்ற ஏழை விதவை பெண்கள் 68 பேருக்கு அமைச்சர் பி. டி. எஸ். இலவச தையல் இயந்திரங்களை வழங்கினார். சமூக நல இலாகா சார்பில் விதவைகளின் குழந்தைகளுக்கு இலவச பாடபுத்தகம், நோட்டு புத்தகங்களை வழங்கினார்.

மோகன் ஆசிரம குழந்தைகளுக்கு பரிசுகள் வழங்கி சிறப்புரை நிகழ்த்தினார்.

அமைச்சர் பி.டி.எஸ். பேசும்போது கூறியதாவது:-

இங்கே மாவட்டஆட்சித் தலைவர் பேசும்போது மாவட்டம் முழுதுமுள்ள 14 லட்சம் பேர்களில் பாதிக்குமேல் பெண்கள் உள்ளனர். படித்த பெண்கள் வேலை வாய்ப்பு இன்றி இருப்பதாகக் குறிப்பிட்டார்.

அந்தச் சகோதரிகளுக்கு நான் சொல்லிக் கொள்வதெல்லாம் அலுவகத்திற்கு செல்வதுதான் வேலை என்றுதப்புகணக்குபோடக் கூடாது. வீட்டில் அமர்ந்தபடியே சுயவேலை வாய்ப்பு திட்டத்தின் கீழ் சமுகநல இலாகாவினால் அமலாக்கப் பட்டுவரும் பல திட்டங்களை சகோதரிகள் பயன் படுத்திக்கொள்ள வேண்டும்.

### சுய வேலை வாய்ப்பு

மதுரை மாவட்டத்திலும், தருமபுரி மாவட்டத்திலும் சகோதரிகள் இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கூட்டுறவு முறையில் சங்கங்களை அமைத்து தீப்பெட்டித் தொழில், பனை ஓலை, சணல் பொருட்கள் செய்வதில் பயிற்சிபெற்று பயன்பெறுகிறார்கள்.

அப்போது பெண்கள் வீட்டிலிருந்தபடியே தீப்பெட்டி, சாக்பீஸ் செய்தல் கவர்செய்தல், ஜெம்கிளிப் தயாரித்தல், பாய் முடைதல், பொம்மைகள் செய்தல் ஆகிய குடிசைத் தொழில்களை சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின்கீழ் உருவாக்கிக்கொள்ளலாம்.

சகோதரிகள் நினைத்தால் 5 அல்லது 10 பேர் ஒன்று சேர்ந்து தையல் பயிற்சி நிலையத்தை தோற்றுவிக்கலாம்.

அதே முறையில் கறவை மாடுகள் வைத்து பால் பண்ணை துவக்கலாம். கோழிப் பண்ணைகள் உருவாக்கலாம்.

நான் சகோதரிகளுக்கு ஒன்று கூற விரும்புகிறேன் அலுவலகத்திற்கு சென்று வருவதுதான் கவுரவமான தொழில் என கருத வேண்டாம்.

நேர்மையான, நாணயமான எந்த தொழில்செய்தாலும் தவறில்லை.

### இதுவே முதல்முறை

வீட்டிலேயே அமர்ந்தபடியே பெண்கள் வேலை வாய்ப்பு பெறவேண்டும் என்பதற்காகவே புரட்சித் தலைவர் அதிக வேலை வாய்ப்பை உருவாக்கி கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

தமிழக அரசின் வரலாற்றிலேயே பெண்களின் வேலை வாய்ப்புக்காக 25 லட்சம் ரூபாய் ஒதுக்கிய முதல் முதல்வர் புரட்சித் தலைவர்தான்.

அதுமட்டுமல்ல குடிசை தொழில் மூலம் உருவாக்கப்படும் பொருட்களை அரசே விற்பனைக்கு ஏற்றுக் கொள்வது இது தான் முதல் தடவை.

இந்த நல்லவாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு நல்ல திட்டங்களை வகுத்து வறுமையை ஒழிக்க வேண்டும். வாழ்க்கையில் முன்னேற வேண்டும். பொருளாதாரத்தில் வளர்ச்சியடைய வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பி.டி.எஸ்.கூறினார்.

# கழகச்செய்திகள்

### அரங்கநாயகம் தாயகம் திரும்புகிறார்

சென்னை, ஜூலை 30- கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம்ரோம் நாட்டிலிருந்து ஆகஸ்ட் 3 ஆம் தேதி காலை 10.40மணிக்கு பம்பாய் வந்து சேருகிறார். மறுநாள் மாலை 5 மணிக்கு பம்பாயிலிருந்து விமானம் மூலமாகப் புறப்பட்டு சென்னைக்கு 4 ஆம் தேதி வந்து சேருகிறார்.

### கே. ஏ. கே. நிகழ்ச்சிகள்

ஆகஸ்டு 1-ந் தேதிகாலை 9 மணி ஜோலார்பேட்டை காலை 11-30 மணி ஊத்தங்கரை மேல்நிலைப்பள்ளி, கட்டிட திறப்பு, மாலை 5 மணி சிங்காரப்பேட்டை மேல் நிலைப்பள்ளி கட்டிட அடிக்கல் நாட்டு விழா, மாலை 7 மணி சிங்காரப் பேட்டை பொதுமக்கள் வரவேற்பு. இரவு 8-30 மணி ஊத்தங்கரை பொது மக்கள் வரவேற்பு.

### ராயபுரம்

30-7-79 திங்கட்கிழமை மாலை7 மணிக்கு செயின்ட் சேவியர் தெரு (நார்த்விக் பெண்கள் உயர் நிலைப் பள்ளி அருகே)எம் நாகேந்திரன் தலைமையில் பேசுவோர்: அமைச்சரின் பேரவைச் செயலர் ஐசரி வேலன், வண்ணை கோவிந்தன், முத்துகுமார், இ. மதுசூதனன் ஏ. தாஸ், ஸ்ரீராமுலு வி. அரி கிருஷ்ணன் மற்றும் பலர்.

### வடுகப்பட்டி

31-7-79 அன்று மாலை 6-மணிக்கு கோவை வடுகப்பட்டி அண்ணா திடலில் வி. மொக்கையன் தலைமையில் பேசுவோர்: கோவை அண்ணாநம்பி, கே. அம்சாமுகமது,இரா. சின்னராசு, கா. கண்ணதாசன் மற்றும் பலர்.

### திருநெல்வேலி

திருநெல்வேலி திலி டவுன் மேலரத வீதியில் கழக ஆட்சியின் இரண்டாண்டு சாதனை விளக்கப் பொதுகூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு வி.வி. சிவன் தலைமை வகித்தார். நெல்லை பாலாஜி, ஏ. பிச்சையா, மற்றும் பலகழகத் தோழர்களும் பேசினா.

### திருமானிலையூர்

திருமாநிலையூரில் கழக அரசின் இரண்டாண்டு சாதனை விளக்கப் பொதுக் கூட்டம் நடந்தது. கூட்டத்திற்கு ஏ.மணிதலைமை வகித்தார். கூட்டத்தில் ஏ. ராமன், எம். சாரங்கபாணி, பசுவை. நடராசன் எம். தியாகராசன், கே. ராமசாமி, ராஜகோபால், ஜி. ஆறுமுகம், வி. மேகநாதன், பி. நல்லுச்சாமி, எம். செல்வராஜ் ஆகியோர் பேசினர். ஜி. கே. எஸ், குழுவினரின் கலை நிகழ்ச்சியும் நடந்தது.

முசிறி லாரி விபந்து

### வை. பெருமாள் ஆறுதல்

சென்னை, ஜூலை 30. திருச்சி அருகே முசிறியில் புலியூரைச் சேர்ந்த விவசாயத் தோழர்கள் லாரி விபத்துக்குள்ளாகி திருச்சி பெரிய மருத்துவமனையில் சிகிச்சைப் பெற்று வருகிற 61 பேர்களையும் கழக தொழிற் சங்கப் பிரிவுச் செயலாளர் வை. பெருமாள் சந்தித்து ஆறுதல்கூறினார். அவருடன் திருச்சி வழக்கறிஞர் கே. பெருமாள், துரைராஜ், ஜெய்லாப்தீன், பாலகிருஷ்ணன் மற்றும் கழக முன்னணித் தோழர்கள் சென்றிருந்தனர்.

பல்கலைக்கழக தலைவர் பதவி பொறுப்புகள்:

### தேசாய் விலகினார்

புதுடெல்லி, ஜூலை 30- பிரதமர் பதவியிலிருந்து விலகியமொரார்ஜிதேசாய் தான் வகித்து வந்த நேரு பல்கலைக் கழக விஸ்வபாரதி பல்கலைக் கழக தலைவர் பொறுப்புக்களை ராஜினாமாசெய்தார்.

மொரார்ஜி தேசாயால் நியமிக்கப்பட்ட அட்டர்னி ஜெனரல்கள் மூன்று பேரும், சொலிசிட்டர் ஒருவரும் தங்கள் பதவிகளைராஜினாமாசெய்தனர்.

# அரசு உதவி: முதல்வர் முழக்கம்

(4ம் பக்கத் தொடர்ச்சி)

விடுவார்கள். தோல்வி அடைந்தால் அவுட்தான்.

எந்தத் தொழிலை நடத்தினாலும் லட்சியம் இருக்க வேண்டும்.

கலைஞர்களுக்கு இந்த அரசு பாதுகாப்பளிக்கும்.

சினிமாவில் நான் யாரையோ நம்பி இருந்ததாக கூட சிலர் சொல்கிறார்கள். 1954ம் ஆண்டில் அண்ணா அவர்கள் இதைப் பற்றி குறிப்பிட்டு இருக்கிறார்.

கட்சி என்பது மதம் போன்றது. அந்த மதம் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு வரைமுறை இருக்கிறது.

சைவம்,வைணவம், சனாதனம், சமணம், புத்தம் ஒவ்வொன்றுக்கும் வரைமுறை இருக்கிறது.

இதுபோல கட்சிகளுக்கும் வரைமுறை இருக்கிறது. அகத்தையும் புறத்தையும் கட்டுப்படுத்த வேண்டும்.

புறத்தைக் கட்டுப் படுத்த சமுதாய சட்டங்கள் இருக்கின்றன. அகத்தைக் கட்டுப்படுத்த தாய் தந்தை, பள்ளி, கலைஞர்கள் இருக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் கோவலன் கதை என்றால் அரசனின் குடலைப்பிடுங்கி கண்ணகிமாலையாக அணிந்ததாகநாடகம்நடத்துவார்கள். கண்ணகியை காளி போலக் காட்டுவார்கள்.

பூரண கர்ப்பிணிகள், பயந்த வயோதிகர்கள் வராதீர்கள் என்று நோட்டீசில் போடுவார்கள்.

இப்போது சிலப்பதிகாரம் பார்த்தால் யார்குடலையும் பிடுங்கும் காட்சி இராது.

இவைகளைத்தான் அண்ணா அவர்கள் குறிப்பிட்டு மனிதனிடம் விஷம் குறைந்து அமுதம் அதிகம் ஆகவேண்டும். அது கலைத் துறையிலும் பயன்பட வேண்டும் என்றார்.

### 1954-ல் அண்ணா பாராட்டு

"வாளில் கூர்மை, குறி பார்க்கப் பயிற்சி வேண்டும். அதுபோல கொள்கையைச் சொல்லவும் பயிற்சி வேண்டும்.

இப்படிப்பட்டகூர்வாளை-நமதுலட்சியங்களைச்சொல்லும் ஆட்களை- சினிமா துறையை சீர்திருத்தவும் நாம் வைத்திருக்கிறோம்.

கே.ஆர்.ராமசாமி, என்.எஸ்.கே, எம்.ஜி.ஆர்.இப்படி பலப்பல வாள்கள் இருக்கின்றன" என்று அண்ணா அவர்கள் பேசிய பேச்சு மாலைமணியில் இருக்கிறது.

அண்ணா அப்படிப்பேசிய ஆண்டு 1954. இப்போது 1979. 25 ஆண்டுகட்கு முன்பே அண்ணா இப்படிச் சொல்லி இருக்கிறார்.

அந்தப் பணியில் நான் தொடர்ந்து நடப்பதால் தான் நான் முதல்வராக இருக்கிறேன்.

(கை தட்டல்)

எனக்கு எந்த விதமான ஜாதி-மத நம்பிக்கையும் இல்லை. இந்த ராமச்சந்திரன் ஜாதி-மதத்திற்கு அப்பாற்பட்டு, ஏழை-பணக்காரன், முதலாளி-தொழிலாளி என்ற வித்தியாசத்திற்கு அப்பாற்பட்டு கடமையை செய்பவன்.

(கைதட்டல்)

இந்த நம்பிக்கைவெற்றி பெற அனைவரும் ஒத்துழைக்க வேண்டும்.

ஸ்டேடியம் அமைக்க 1971ல் அரசு நிலத்தை எடுத்தது. அங்கே அய்யப்பன் கோவில் இருக்கிறது, அதை இடிக்கப் போவதில்லை.

ஆனால் விளையாட உருவாகும் இடத்தில் புதிதாக 2-3 அய்யப்பன் கோவில்களை ஏன் அமைக்க வேண்டும்?

71ம் ஆண்டில் இருந்த அரசு இதனை சரியாக நிறைவேற்றவில்லை என்று குறையாகக் கூறவில்லை.

புதிதாக அந்தக்கோவில்கள் அந்த இடத்தில் தேவையா என்பதை பெரியவர்கள் அவர்களுக்குச் சொல்ல வேண்டும். இதில் நீங்களே புத்தி சொன்னால் உங்களுக்கும் நல்லது எங்களுக்கும்நலலதுஅரசுக்கும் நல்லது. வேறு இடத்தில் கட்டிஇருந்தால்எங்களுக்கு ஆட்சேபம் இல்லை,

அந்தஇடம்புறம்போக்கு நிலம் என்றுகுடிசை கட்டுவதும் சரியல்ல.

பிறகு இவைகளைப் பிரிக்கும் நிலையை உருவாக்கி எங்களைக் குற்றவாளியாக ஆக்கும் நிலையை உருவாக்காமல் ஒத்துழையுங்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

### ஆர். எம். வீ. பேச்சு

திண்டுக்கல் கலை விழாவில் அமைச்சர் ஆர். எம். வீ. பேசியதாவது:-

சென்னை நகரில் நடந்து வந்த இப்படிப்பட்ட கலை விழாக்களை வெளி மாவட்டங்களில் நடத்த வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் விரும்பினார்.

இப்படிப்பட்ட கிராமிய கலைகளை வெளிநாட்டினர் பார்த்து வியந்துபாராட்டுகிறார்கள். அந்த அளவுக்கு நாம் போற்றிப் பாராட்டுவதில்லை. நம் அருமை நமக்குத் தெரியவில்லை.

இப்படிப்பட்ட கலைஞர்களைப்பாதுகாக்கவேண்டும் இந்தக் கலைகளை வளர்க்க அரசு ஆணைபிறப்பித்திருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

### சுப்புலட்சுமி பேச்சு

அமைச்சர் சுப்புலட்சுமி பேசியதாவது:

செய்தி சுற்றுலாத்துறையினர் நடத்தும் பொருட்காட்சிகள் வெளிமாவட்டங்களில் நடத்தப்படுகின்றன. இதன்மூலம் அரசின் சாதனைகளை மக்கள் அறிய வாய்ப்பு ஏற்படுகிறது. மக்களுக்கும் பொழுதுபோக்கு வசதி கிடைக்கிறது.

ஒரு நாட்டின் பெருமை அதன் கலை- பண்பாட்டில் இருக்கிறது. தமிழ்நாட்டுக் கலை- கலாசாரம் அகிலஉலகிலும் பரவிஇருக்கிறது.

இப்படிப்பட்ட கிராமிய கலைகளுக்கு இந்த அரசு புத்துயிர் ஊட்டி வருகிறது என்று கூறினார்.

### டி. வி. என்.

முத்தமிழ் விழாவில் நடிகமணி டி. வி. என். பேசுகையில் கோடை காலத்தில் இப்படிப்பட்ட திறந்தவெளி அரங்குகளில் முத்தமிழ் விழா நடத்த இயல் இசைநாடகமன்றம் திட்டமிட்டு இருக்கிறது என்றார். தமிழகத்தை 3 பிரிவுகளாகப்பிரித்து இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் அரசின் உதவியோடு நடத்தப்படும் என்று கூறினார்.

# மருத்துவகல்லூரிவிண்ணப்பங்கள்: அரசு முக்கிய அறிவிப்பு

சென்னை, ஜூலை 30- இந்திய அரசியலமைப்பு 15 (4) விதிமுறையின்கீழ் கூறப்பட்டுள்ள நோக்கத்திற்காக கல்வியிலும் சமுதாயத்திலும் பின்னிலையில் உள்ளவர்களாகக் கருதப்படுவதற்கும், மருத்துவக் கல்லூரியில் ஒதுக்கப்பட்டுள்ள 31 சதவீத இட ஒதுக்கீட்டைப் பெறுவதற்கும் இந்த ஆண்டு மருத்துவக் கல்லூரிகளில் முதலாவது எம்.பி.பி.எஸ் படிப்பு படிக்க விண்ணப்பம் செய்யும் மாணவர்கள் வருமான சான்றிதழ்கொடுக்கவேண்டும்.

பொது ஒதுக்கீடு இடங்களுக்கு விண்ணப்பிக்கும் மாணவர்களும்,மலைவாழ், அரிசன மாணவர்களும் வருமான சான்றிதழைத் தங்களது விண்ணப்பங்களுடன் அனுப்பவேண்டியதில்லை. இந்த விபரம் எம்.பி.பி.எஸ். படிப்பு தகவல் பட்டியலில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பி.டி.எஸ், பி.பார்மசி ஆகிய படிப்புகளுக்கு விண்ணப்பிக்கும் மாணவர்களுக்கும் இம்முறை பொருந்தும்.

மருத்துவக் கல்லூரியில் சேருவதற்கு விண்ணப்பங்களைப் பெறும் நாள் 31-7-79 மாலை 5 மணி வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

# திசைதிருப்பமுயற்சிக்கிருர் கலைஞர்! திசைதிரும்பமாட்டார்கள் மக்கள்! அவர்கள் புரட்சித்தலைவரின் பக்கமே! (8)

**பி. சி. கணேசன்**

சிவகங்கையில் உரையாற்றியுள்ள கலைஞர் வெறும் வார்த்தை சாதுரியங்களால் தன்னுடைய கட்சியை நியாயப்படுத்திவிட முடியும் என்று நம்பிப் பேசி இருக்கிருர்.

'திராவிட இன எழுச்சி தீபத்தை அணைக்க எம். ஜி. ஆரின் கரம் நீளுகிறது' என்கிருர். எப்படி என்று ஆதாரபூர்வமாகவோ புள்ளி விவரங்களுடனே அவர் விளக்கவில்லை. நீதிக்கட்சியின் வழியில், பெரியார் வழியில். அண்ணு வழியில் தமிழக அரசின் உத்தரவு அமைந்துள்ளதைத் தக்க சான்றுகளுடன் இந்த கட்டுரைத் தொடரில் எடுத்துக்காட்டி இருக்கிருேம். நம்முடைய வாதத்தில் எதையும் கலைஞர் மறுத்தாரில்லை.

மாருக திராவிடர்இனத்துக்கு ஏதோ பேராபத்து வந்துவிட்டதைப் போலவும் அதைத் தடுத்து நிறுத்த இவர் ஒருவர் மட்டுமே இருப்பது போலவும் பேசி இருக்கிருர்.

திராவிடர் இயக்கத்தின் கறை படிந்த அத்தியாயத்தை எழுதியவர் யார் என வரலாறு தெளிவாகவே காட்டிக் கொண்டிருக்கிறது.

திராவிடர் இயக்கத்தின் மகத்தான சாதனையாக 1967-ல் அண்ணுவால் ஆட்சிப்பீடம் ஏற்றப்பட்ட அரசு 1976-ல் அவமானகரமான குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகி பதவி நீக்கம் செய்யப்பட்டதற்கு யார் பொறுப்பு என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

அப்போது புரியும் எழுச்சி தீபத்தை அணைப்பதற்கு நீண்ட கரம் யாருடைய கரம் என்பது.

நாயரையும், நடேசனுரையும், பெரியாரையும், பேரறிஞர் அண்ணுவையும் திரும்பத் திரும்பச் சொல்லுவதனுல் அநியாயங்கள் நியாயங்கள் ஆகிவிடாது. அவதூறுகள் பெருமைகள் ஆகிவிடாது. வீழ்ச்சி எழுச்சியாகி விடாது.

நிழலோடு போர் தொடுக்கிருர் கலைஞர். இல்லாத பிரச்சினையை இருப்பதாக எடுத்துக்காட்டி முரசு ஒலிக்கிருர்.

பிற்படுத்தப்பட்டோருக்கு அளிக்கப்பட்ட சலுகைகள் ரத்து செய்யப்படவில்லை. அந்தச் சலுகைகள் ஏழை எளிய மக்களுக்குக் கிடைக்கின்ற வாய்ப்பினை தமிழக அரசின் உத்தரவு ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. இது எப்படி திராவிடர் இன உணர்வுக்கு எதிரானது ஆகும் என்று கலைஞரும் சொல்லவில்லை; அரசியல் நிர்ப்பந்தம் காரணமாக அவரோடு அணி சேர்ந்திருப்பவர்களும் சொல்லவில்லை.

அரசியல் களத்தில் தோல்வி கண்டவர்கள் புதிய 'கொலம்பஸ்' ஆகி ஏதேதோ பிதற்றிக் கொண்டிருக்கிருர்கள்.

கலைஞர் சொல்லுகிருர்: "இன்று எம். ஜி. ஆர். கொண்டுவந்திருப்பது வகுப்பு வாரி உரிமை அல்ல. வருமானவாரிச் சலுகை. வகுப்புவாரி உரிமைக்கும் வருமானவாரிச் சலுகைக்கும் வித்தியாசம் இருக்கிறது."

கலைஞரே குழம்பிப் போயிருக்கிருரா, அல்லது மக்களை குழப்புவதற்காகப் பேசுகிருரா, என்று நமக்கு உள்ளபடியே விளங்கவில்லை.

அரசியல் மூன்ருந்தரங்கள் அவசரக் கோலத்தில் விவரம் புரியாமல் எதையாவது பேசுவது உண்டு.

ஒன்பதாண்டுக்காலம் தமிழகத்தில் முதல்வராக இருந்தவர் இப்படி ஒரு வாதத்தைக் கிளப்புகிருர் என்ருல் அந்த வேடிக்கையை எண்ணி விலா நோகச் சிரிப்பதைத் தவிர வேறு வழி என்ன?

கலைஞர் சொல்கிறபடி புரட்சித்தலைவர் அளித்திருப்பது வருமானவாரிச் சலுகை என்ருல், அரசு நிர்ணயித்துள்ள உச்சவரம்புக்கு உட்பட்ட அனைவருக்குமே அந்தச் சலுகை கிடைக்கவேண்டும். அப்போதுதான் அது வருமானவாரிச் சலுகையாக இருக்கமுடியும்.

ஆனல் தமிழக அரசின் உத்தரவு பிற்படுத்தப்பட்டோருக்கு மட்டுமேதான் அந்தச் சலுகை அளித்திருக்கிறது. அப்படி இருக்கும்போது அது எப்படி வருமானவாரிச் சலுகையாகும் என்று நிர்வாகத்தில் நீண்டகாலம் இருந்த கலைஞர் விளக்கம் சொன்னுல் நன்ருக இருக்கும்.

இல்லை திசை திருப்புவதுதான் என் நோக்கம் என்று கலைஞர் வாதிட்டால் "ஐயன்மீர்! நீர்திராவிட இயக்கப்பாதையிலிருந்து திசை திரும்பிச்செல்லமுயலுகிறீர்! ஏழை எளிய மக்களை முன்னேற விடாமல் அவர்களை திசைதிருப்பும் பணியில் ஈடுபட்டிருக்கிறீர்! என்று கலைஞருக்குச் சுட்டிக்காட்டுவது நமது கடமை ஆகிறது.

தேவையில்லாமல் தன்னுடைய சிவகங்கைப் பேச்சில் கலைஞர் மற்றெரு வாதத்தையும் கிளப்பி இருக்கிருர். அவர் சொல்கிருர்:

"தகுதி, திறமை அடிப்படையில்தான் நம் வீட்டு பிள்ளைகளை மருத்துவக் கல்லூரியிலும்- எஞ்சினியரிங் கல்லூரியிலும்- விவசாயக்கல்லூரியிலும் சேர்ப்பது என்ருல் நம் வீட்டுப்பிள்ளைகள் நம் குடும்பத்தினர் எத்தனை ஆண்டு காலமாக திறமை பெற்றவர்களாக விளங்குகிருர்கள். ஏறத்தாழ முப்பதாண்டு காலமாக தான் நமக்கு விழிப்புணர்ச்சி ஏற்பட்டது."

தேவையில்லாமல் வாதம் புரிகிருர் கலைஞர். பிற்படுத்தப்பட்டோருக்கும் தாழ்த்தப்பட்டோருக்கும் ஒதுக்கப்பட்டுள்ள நாற்பத்தொன்பது சதவிகித இடங்களில் எந்த மாற்றத்தையும் தமிழக அரசு செய்யவில்லை. அதில் ஒரு பகுதியில் பிற்படுத்தப்பட்டோரிலேயே ஏழை எளிய மக்கள் இடம்பெற வசதி செய்கிறது.

கலைஞர் தெளிவாகச் சொல்ல வேண்டும். பிற்படுத்தப்பட்டோரில் ஏழை எளியவர்களைப் பற்றி கலைஞருக்கு அக்கறை இல்லாமல் இருக்கலாம். அவருக்கு இன்று ஏற்பட்டுள்ள வாழ்க்கைச் சூழ்நிலை அப்படி.

புதிய பணக்காரரர்கள் புடை சூழ பவனி செல்லும் கலைஞருக்கு, கிராமப்புறங்களிலே வாழும் பிற்படுத்தப்பட்ட ஏழை எளிய மக்கள், தங்களுக்கென்று அரசுச் சலுகைகள் உள்ளன; அதைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்கிற விவரமே தெரியாத பஞ்சை பராரிகள்-கவனத்துக்கே வராமல் போகலாம். அவர் இன்றுள்ள நிலை அப்படி.

தன்னைக்காப்பாற்றிக் கொள்ள இயக்கத்தை துணைக்கழைக்கிருர் கலைஞர்.

இன்றைக்கு கலைஞரோடு வேறு சிலரும் சேர்ந்து கொண்டு கூச்சல் போடுகிருர்கள். முன்னுள் துணை வேந்தர் சுந்தரவடிவேலு அவர்களும் புரட்சித்தலைவரை தாறுமாருக விமர்சித்திருக்கிருர்.

இதே சுந்தரவடிவேலு தகுதி அடிப்படையிலேயே பிற்படுத்தப்பட்டோரும் தாழ்த்தப்பட்டோரும் தொழிற் கல்லூரிகளிலும் உத்தியோகங்களிலும் எந்த அளவுக்கு எண்ணிக்கையில் நிறைய இடங்களைப் பெற்றிருக்கிருர்கள் என்று புள்ளிவிவரங்கள் கொடுத்து முன்னர் கட்டுரைகள் தீட்டவில்லையா?

தமிழக அரசின் உத்தரவுக்குச் சாதகமாக சொல்ல வேண்டிய அந்தப்புள்ளி விவரங்களை இப்போதல்லவா சுந்தரவடிவேலு சொல்ல வேண்டும்? அந்தப்புள்ளி விவரங்களை இருட்டடிப்புச் செய்துவிட்டு "எம். ஜி. ஆர். அபத்தமான உத்தரவு போட்டிருக்கிருர்" என்று முன்னுள் துணைவேந்தர் மேடை முழக்கம் செய்கிருர் என்ருல் அதற்கு என்ன காரணம் என்பதை நாம் சொல்ல வேண்டிய கட்டாயம் வரலாம்.

பதவி இழந்தவர்கள், பதவிக்காலம் முடிந்த பிறகு நீடிப்புக் கேட்டு அது கிடைக்காததால் விரக்திக்கு ஆளானேர், இப்படி சொந்த இழப்புக்களுக்கு உள்ளானேர் ஒன்றுகூடி ஓர் அணி திரண்டால் நிச்சயம் அது மக்கள் நலன் காக்கும் அணியாக இருக்க முடியாது.

தமிழக அரசின் உத்தரவின் நோக்கம் தெளிவானது. தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தீர்க்கமான பார்வையுடன் அந்த உத்தரவை உருவாக்கி இருக்கிருர். எப்படி என்பதை அடுத்த கட்டுரையில் பார்க்கலாம்.

- தொடரும்

# இந்திய வரலாற்றிலேயே தியேட்டரில் நடந்த மிகப்பெரிய கோர விபத்து

★ தூத்துக்குடியில் சினிமா கொட்டகை தீ பிடித்து 100க்கும் அதிகமானவர் சாவு: அழுகுரல் ஓலம்

★ சதியா? விபத்தா? விசாரணை நடத்த உயர் அதிகாரிகள் விரைந்தனர்

# இறந்தவர்கள் குடும்பங்களுக்கு அரசு உதவும்

## முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு

தூத்துக்குடி, ஜூலை 30- தூத்துக்குடியில் சினிமா கொட்டகை தீப்பிடித்து 100க்கும அதிகமானவர்களிறந்தனர் இந்தியவரலாற்றிலேயேசினிமா கொட்டகையில் இதுபோன்ற கோரவிபதது நடநததில்லை. நடந்தசம்பவம் விபத்தா? அல்லது நாசவேலையா என்று அறிய உயர் அதிகாரிகள் விசாரணை நடத்துகிருர்கள்.

விபத்தில் இறந்தவர்கள் குடும்பத்துக்குத் தேவையான உதவிகளை அரசு செய்யும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்துள்ளார்.

நினைத்தாலே உள்ளத்தை உலுக்கி நெஞ்சத்தில் ரத்தம் கசியச் செய்யும் கோர விபத்து தூத்துக்குடியில் நேற்று மாலை 4-மணிக்கு நடந்தது.

தூத்துக்குடியில் லூர்தம்மாள்புரத்தில் லட்சுமி டூரிங் டாக்கீஸ் என்ற சினிமாகொட்டகை உள்ளது. தென்னந்தட்டிகளால் இந்த கொட்டகை கட்டப்பட்டிருந்தது.

இதில் சிவாஜிகணேசன், ஜெமினி கணேசன், தேவிகா, எம். ஆர். ராதா நடித்த பாவமன்னிப்பு படம் திரையிடபபட்டது.

நேற்று ஞாயிற்றுக்கிழமை என்பதால் பகலில் மாட்னி காட்சியும் நடந்தது. இந்தக் காட்சி 2-30க்குத் தொடங்கியது.

கொட்டகை நிரம்பி வழிந்தது.

படம் நடந்துகொண்டிருக்கும்போது முதலில் திரையில் தீப்பிடித்துக் கொண்டது இதனுல் படம் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அலறி அடித்துக் கொண்டு ஓடத் தொடங்கினர்.

அப்போது காற்று பலமாக வீசிக்கொண்டிருந்ததால் தீ மளமளவென்று தாவி கொட்டகை முழுவதும் பரவியது.

பகல் காட்சி நடத்துவதற்கு இருட்டு தேவைப்பட்டதால், கொட்டகையைச் சுற்றி தார்பாய் போட்டு கட்டிவைத்திருந்தார்கள்,

அதன் வழியாக ஓடுவது சிரமமாக இருந்தது.

கொட்டகை முழுவதும் ஒரே அழுகுரலும், கூக்குரலுமாக இருந்தது. அந்த நெரிசலில் பிள்ளைகுட்டிகளுடன் வந்திருந்த தாய்மார்கள், தங்கள் குழந்தைகளைத் தேடிப் பிடித்து வெளியேற முற்பட்டனர்.

சிலர் தப்பி ஓடினர். உள்ளே ஏராளமான பேர் திணறிக் கொண்டிருந்த போது எரிந்துகொண்டிருந்த கொட்டகை அப்படியே சரிந்து விழுந்து உள்ளே இருந்த மக்களை அமுக்கிக் கொண்டது.

இதனுல் நூற்றுக்கணக்கானவர்கள் இறந்து விட்டனர். மேலும் நூற்றுக்கணக்கானவர்கள் தீக்காயம் அடைந்தனர்.

காயமடைந்தவர்கள் தூத்துக்குடி அரசு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர். சிலர் தனியார் மருத்துவமனையிலும் சேர்க்கப்பட்டார்கள்.

சிகிச்சை பெறுபவர்களில் 30 பேர் நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது.

இறந்தவர்களில் பெரும் பகுதியினர் பெண்கள் மீனவர்கள்.

பெண்கள் பகுதியில் தார்பாய், பனை ஓலை போட்டு கட்டி வைக்கப்பட்டிருந்ததால் அவர்கள் வெளியே வருவதில் சிரமம் ஏற்பட்டது. ஆண்கள் பகுதியில் வழி இருந்ததால் அவர்கள் தப்பிச் செல்ல முடிந்தது.

இந்திய வரலாற்றிலேயே சினிமா கொட்டகையில் இவ்வளவு பெரிய கோர விபத்து நடந்திருப்பது இதுவே முதல்தடவையாகும்.

### புரட்சித் தலைவர் வேதனை

நடந்த விபத்து பற்றி கேள்விப்பட்டதும் புரட்சித்தலைவர் மிகவும் துயரமுற்ருர்.

வேதனையுற்ற நிலையில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவுவதற்கான ஏற்பாடுகளுக்கு முதல்வர் உத்தரவிட்டார். நடந்த சம்பவம் பற்றியும் விசாரணைக்கு புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

முதல்வர்வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு :

நாளைகாலைஇந்தவிபத்து குறித்து விசாரணை செய்ய ஐ. ஜி. செந்தாமரை சென்னையிலிருந்து தூத்துக்குடிக்குச் செல்வார்.

நடந்தவிபத்துஇயற்கையானதாஎன்பதைப்போலீஸ் மிகவும் தீவிரமாக நுணுக்கத்துடன்ஆராய்ந்து உண்மையினை கண்டுபிடிக்கும்.

எப்படியிருந்தாலும் இப்படிப்பட்ட விபத்துஏற்படுவது என்பது எவ்வளவுகல்நெஞ்சக்காரர்களாக இருந்தாலும் அவர்களையும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கி வேதனையின் பிரதிபலிப்பாக ஆக்கிவிடும் என்பதில் யாருக்கும் மாறுபட்ட கருத்து இராது.

இத்தனை மிகப் பயங்கரமான எப்போதும் நடக்கவே கூடாத ஒரு விபத்து நடப்பதும் மக்களுக்குபாதுகாப்புகிடைக்கவில்லைஎன்பதும்அதற்கு யார்காரணம் எதுகாரணம்என்பதையும் கண்டுபிடிப்பது மட்டுமல்ல, எதிர்காலத்தில் இத்தகைய கொடிய சம்பவங்கள் ஏற்படாமல் தடுக்கக்கூடிய வகையில் தீவிர நடிவடிக்கை எடுக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உயிரிழந்தவர்கள் குடும்பத்தினருக்கு தமிழக அரசின் சார்பாகவும் அனைத்திந்திய அண்ணு தி. மு. கழகத்தின் சார்பாகவும் அனைத்துக் கட்சிகளின் சார்பாகவும் ஒட்டு மொத்தமாக தமிழக மக்களின் சார்பாகவும் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்

நமது உள்ளத்தின் உணர்வுகளை வெளிப்படுத்துவது நம்ஒவ்வொருவரின் கடமையும் ஆகும்.

ஆனல் அத்தோடுநம்பணியும் பொறுப்பும் முடிந்துவிடவில்லை எந்தக்காரணத்தைக் கொண்டும் இது போன்ற விபத்துக்கள் ஏற்படாமல் தடுப்பதோடு விபத்துக்குள்ளாகி விட்ட குடும்பத்தினருக்கு தேவையான அவசியமான உதவிகளை தமிழக அரசு தரும் என்பதை குறிப்பிட விரும்புகிறேன்.

பணத்தைக்கொண்டோ வெறும் ஆறுதலான வார்த்தைகளைக் கொண்டோ மட்டும் இறந்தவர்கள் குடும்பத்தினரின் இழப்பை ஈடுகட்டிவிடமுடியாது.

ஆனல் நிகழ்ந்துவிட்ட இந்தக் கொடிய துன்பத்திற்கு தமிழக மக்கள், அனைவரின் அனுதாப உணர்வினைக் காட்டும் வகையில் நாம் அனைவரும் அவர்கள் குடும்பங்களுக்கு ஆதரவு நல்குவது இன்றியமையாததாகும்.

அதற்கேற்ற வகையில் அவர்கள் குடும்பத்துக்கு மாநிலசக்திக்கு உட்பட்ட நம்மாலான அனைத்தையும் செய்வோம் என்று அரசின் சார்பாக உறுதி கூறிக்கொள்கிறேன்.

மற்றும் தேவையான மருத்துவ வசதிகளுக்காக சென்னையிலிருந்தும் மற்ற பகுதிகளிலிருந்தும் மருத்துவர்கள் உடனடியாக தூத்துக்குடிக்கு அனுப்பி வைக்கப்படுவார்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

### கழக எம்.எல்.ஏ.

கழக எம். எல். ஏ. தனசேகரன் அங்குசென்று உதவிப் பணிகளைக் கவனித்து வருகிருர்.

நெல்லை மாவட்ட கலெக்டர் டி.எஸ். செல்வராஜ், போலீஸ் டி. ஐ. ஜி. துரைராஜ், மாவட்ட போலீஸ் அதிகாரி நடராஜன், ஆர். டி. ஓ. வெங்கடரமணன் ஆகியோரும் நிவாரணப்பணிகளைக்கவனிக்கிருர்கள்.

### அமைச்சர் ராஜா முகமது

மதுரை மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருந்த அமைச்சர் ராஜாமுகமதுவிடம் உடனடியாக தூத்துக்குடிக்குப் போய் நிவாரணப் பணிகளை கவனிக்குமாறு புரட்சித்தலைவர் கூறினுர்.

இதைத் தொடர்ந்து அமைச்சர் ராஜாமுகமது தூத்துக்குடி சென்ருர்.

### சினிமா அதிபர்கள் துயரம்

தென்னிந்திய சினிமா வர்த்தகசபை செயலாளரும் திரை அரங்கு உரிமையாளர் சங்க செயலாளருமான டி. ராமானுஜம் அனுதாபம் தெரிவித்து அறிக்கை விடுத்துள்ளார்.

### அமைச்சர் எஸ். டி. எஸ். அனுதாபம்

சென்னை, ஜூலை 30- நேற்று தூத்துக்குடியில் தியேட்டர் தீவிபத்தில்100 பேர் மரணமடைந்த செய்திகேட்டு அதிர்ச்சி அடைந்த வருவாய்த் துறை அமைச்சர் எஸ்.டி. எஸ். அனுதாபச் செய்தி வெளியிட்டுள்ளார்.

அந்தச் செய்தியில்அவர் கூறிருப்பதாவது:-

தமிழ்நாட்டில் வரலாறு கண்டறியாத பயங்கர தீ விபத்து நேற்று தூத்துக்குடி லூர்தம்மாள் புரத்தில் ஏற்பட்டு 100 பேர் கருகி பிணமானுர்கள் என்ற நெஞ்சை உருக்கிக் கண்ணீர் வரச் செய்யும் துயரச் செய்தி கேட்டு பெரும் அதிர்ச்சி அடைந்தேன்

பாதிக்கப்பட்டகுடும்பங்களுக்கு எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

விபத்தில் உயிரிழந்த குடும்பத்திற்கு தமிழக அரசுசார்பில்தேவையான எல்லா உதவிகளும்செய்து தரப்படும் என்பதை தமிழக முதல்வர் புரட்சித் தலைவர்அவர்கள் சார்பாக தெரிவித்துக் கொள்கிறேன்.

அதிகாரிகள் விபத்து நடந்த இடத்துக்குசென்று உதவிப்பணிகளை மேற்கொண்டுள்ளார்கள். அதிகாரிகள் அவர்களுடைய பணிகளை மேலும் தீவிரமாக செய்ய வேண்டுமென உத்தரவிடப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். அனுதாபச் செய்தியில் குறிப்பிட்டுள்ளார்.

### நெல்லை கலையரசன்-மாலதி நிகழ்ச்சிகள்

30 அடையாறு சென்னை நேரு நகர், ஆகஸ்டு 1- வண்டலூர், 2- காஞ்சிபுரம், 3-வாலாஜா 4-குடியாத்தம்.

முகவரி :
நெல்லை கலையரசன்
31, பாலாஜிசிங்தெரு
சைதை சென்னை-600 015



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனுல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004. ஆசிரியர்: எம்.ஜி. சக்ரபாணி

# அண்ணா



## கலைஞர்கள் ஓய்வு காலத்தில்

## வறுமையில் வாடாமல் இருக்க

# துணைத்தொழில்

## அரசு உதவி: முதல்வர் முழக்கம்

**திண்டுக்கல், ஜூலை 30- கலைஞர்கள் தங்கள் ஓய்வுக் காலத்தில் வறுமையில் வாடாது இருக்க கலைத் தொழிலோடு வேறு ஒரு துணைத் தொழிலை மேற்கொள்ள வேண்டும். இதற்கு அரசு உதவ முன்வரும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்துள்ளார்.**

நமது பண்பாடு, கலை கலாசாரத்தைக் காக்க நமது மொழியைக்காக்கவேண்டும் என்றும் முதல்வர் புரட்சித் தலைவர் தெரிவித்தார்.

திண்டுக்கல் காந்தி மைதானத்தில் நடந்த முத்தமிழ்விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் விழா நிறைவுச் சொற்பொழிவு ஆற்றினர்.

அப்போது அவர் கூறியதாவது:

இயல் இசை நாடக மன்றத்தினர் முத்தமிழையும் இணைக்கும் வகையில் நாடகநிகழ்ச்சிகளைநடத்துகிறார்கள். இதனால் பூரிப்பு எய்திய நிலையில் மனம் திறந்து பேசுகிறேன்.

நான் இங்கே வந்தபோது கரக ஆட்டம் ஆடினார்கள். அந்தக் குழுவில் இருந்த சகோதரிகள் பலர் எனக்கு மாலை அணிவிக்க ஆர்வத்துடன் போட்டி போட்டுக் கொண்டு வந்தனர்.

### கலை உலக சகோதரிகள் ஆர்வம்

எனக்கு மாலைகள் அணிவிக்க எனதுஉடன்பிறப்புக்கள்என்னைசூழ்ந்துகொண்டு போட்டிபோட்டுக்கொண்டு வருவார்கள்.

ஆனால் இவர்கள் கலை உலகத்தினர். இந்தக் கலை உலக உடன்பிறப்புகளும் ஆர்வத்துடன் போட்டி போட்டு வந்தனர்.

என் முன்னே ஒருபக்கம் தாய்மார்கள் நிறைந்து இருக்கிறார்கள். மறுபக்கம் இளைஞர்கள், வாலிபர்கள் சான்றோர்கள் இருக்கிறார்கள்.

### தாய்க்குலம்

நான் தாய்மார்கள் பக்கம் திரும்பியபோது அந்த தாய்க்குலம் என்னை வாழ்த்தி வரவேற்றதைக் கண்டேன்.

தாய்மார்களும், சகோதரிகளும் ஒரு நம்பிக்கையை என்னிடம் வைத்திருக்கிறார்கள். இதனைப் பார்க்கும்போது நம் வாழ் நாளில் இவர்களுக்கு என்ன செய்யப்போகிறோம் என்றகேள்விமேலும் அதிகமாக எழுகிறது.

### திண்டுக்கல்லில் ஸ்டேடியம்

திண்டுக்கல்லில் ஸ்டேடியம் அமைக்க 1971-ம் ஆண்டில் அரசு நிலத்தை எடுத்தது. ஆனால் அதில் கடைகள் ஏற்பட்டிருக்கின்றன. வேறு சில அமைப்புகளும் உருவாக்கப்பட்டுள்ளன. அந்த இடம் தவறாகப் பயன்படுத்தப்படுகிறது.

நிச்சயம் அந்த இடத்தில் ஸ்டேடியத்தை அமைத்துத் தருவோம். (பலத்த கைதட்டல்)

இப்படிப்பட்ட ஒரு இத்தை உருவாக்கும்போது மேடை பலமாக இருக்குமா. ஆடும் கலைஞர்களுக்கு விபத்து வராமல் இருக்குமா என்று கவலைப்பட்டேன்.

கலைஞர்களை உருவாக்குவது எளிதான காரியம் அல்ல. ஆனால் அழிப்பது சுலபம்.

ஒரு கலைஞரை உருவாக்க பல ஆண்டுகள் ஆகும், மக்கள் மனதில் இடம்பெறப் பல ஆண்டுகள் ஆகும்.

அப்படிப்பட்டவர்களுக்கு ஊனம் ஏற்பட்டால் இந்த நாட்டுக் கலைஞர்கட்கு நல்ல திறமை உள்ளவர்கட்கு ஊனம் ஏற்பட்டால் அந்த நட்டம் அவர்களுக்கு மட்டும் அல்ல. தமிழகத்திற்கே நட்டமாகும்.

நல்ல நிகழ்ச்சி நடக்கும்போது இப்படி எல்லாம் நினைக்கலாமா என்று கேட்கக் கூடும். கெட்டதை நினைத்து நல்லதைச் செய் என்பார்கள்.

### கலைவாணர் இருந்தால்?

கலைவாணர் இறந்தபோது "கலை உலகில் ஒரு சகாப்தமே முடிந்துவிட்டது" என்று அறிஞர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டார்கள்.

இன்று அவர் இருந்திருந்தால் என்ன நிலை ஆகியிருக்கும் என்று கற்பனை செய்து பார்க்கிறேன்.

கலைவாணர் பெற்ற அனுபவத்தைஒரே நாளில் ஒருவர் பெற்றுவிட முடியாது.

கதைகளை எழுதினர். நடித்தார். சினிமாவை இயக்கினர், இப்படிப்பட்ட திறமையை ஒரே நாளில் தோற்றுவிக்க முடியுமா? அத்தனை திறமையையும் ஒரே நாளில் நாம் இழந்தோம்.

இந்தப்பகுதியில் இருப்பவர்கட்கு சகோதரர் டி. ஆர். மகாலிங்கம் பற்றி அதிகம்தெரியும். சொந்தக் குரலில் பாடி நடித்தவர்.

நான் இங்குவரும்போது அவருக்கு அடுத்தபடியாக சங்கீதம் தெரிந்த நடிகர் யார் இருக்கிறார்கள் என்று கேட்டேன்.

விரல்விட்டு எண்ணக் கூடியவர்களே இருந்தனர். அப்படிப்பட்டவர்களில் ஒருவரை இழந்தோம். அந்த இழப்பு பெரியஇழப்பாகும்.

இப்படிப்பட்டவர்களை எல்லாம் காக்கும் பொறுப்பு நமக்கிருக்கிறது

கலைஞர்கள் வறுமை, ஏழ்மையில் சிக்கி பிறர் தயவில் வாழும் நிலையை மாற்றுவது அரசின் கடமை.

களும் ஏதாவது ஒரு கலை நிகழ்ச்சியைக் காண விரும்பினார்கள்.

அவர்களுக்கு ஆவடிக் கலைஞர்கள் கரக ஆட்டம் நடத்திக் காட்டினார்கள். இது போன்ற கிராமியக் கலையைப்பார்த்ததே இல்லை. என்று அவர்கள் வியந்து பாராட்டினார்கள்.

இப்படிப்பட்ட கலை நிகழ்ச்சியைக் காட்ட தங்கள் நாட்டுக்குக் கலைஞர்களை அனுப்புமாறு கேட்டுக்கொண்டனர்.

நம்முடைய பக்கத்து வீட்டுக்காரர்கள் திறமை நமக்குத் தெரியாது. நம்முடைய முற்றத்து மல்லிகை மணத்தை நாம் சரியாக கவனிப்பது இல்லை.

நல்ல அறிவாளியை அறிவாளி என்று நாம் ஒப்புவதில்லை. பிறர் பாராட்டிய பிறகு நாம் பாராட்டுகிறோம்.

கரக ஆட்டம் கற்பது எத்தகைய கஷ்டமானது என்பதை நாம் உணர வேண்டும்.

இப்படிப்பட்ட கலைஞர்களை வெளிநாடுகளுக்கு நாம் அனுப்பியாக வேண்டும்.

மற்றநாட்டினர்அதிசயிக்கும் வண்ணம் நமது கலை இருக்கிறது. அப்படிப்பட்ட இடங்களில் நமது புகழ் நிலை நாட்டப்பட வேண்டும்.

கிராமியக் கலைகளை நாம் அலட்சியப்படுத்தகூடாது. நமக்கு என்று ஒரு பண்பாடு இருக்கிறது, கலை இருக்கிறது. கலாசாரம் இருக்கிறது.

### மொழி காக்...

இவைகளைக் காக்க வேண்டும். இவை காக்கப்பட நமது மொழி காக்கப்பட வேண்டும்.

நாட்டுக்குத் தொண்டாற்ற-நல்ல கருத்துக்களை எடுத்துச் சொல்ல- யார் யார் இருக்கிறார்கள் என்பதை அண்ணா அவர்கள் சொல்லி இருக்கிறார்கள்.

26-8-54 'மாலைமணி' இதழில் அண்ணா அவர்கள் காஞ்சியில் பேசிய பேச்சு வெளியிடப்பட்டு இருக்கிறது.

"ஒருகட்சி தன் பணிகளைச் செய்ய அதற்கு என்று கொள்கைகள் இருக்கின்றன. மனிதனிடம் விஷமும் இருக்கிறது. அமுதமும் இருக்கிறது.

### ஆக்க சக்தி பெருக வேண்டும்

இதற்கு அடித்தளம் அமைக்கவே இந்த முன்னுரையைக் கூறுகிறேன்.

இந்தக் கரக ஆட்டம், காவடி ஆட்டம் எல்லாம் கிராமப்புற மக்களுக்கு மிக சாதாரணமாகத் தோன்றக்கூடும்.

ஒரு நிகழ்ச்சியை இங்கே நான் குறிப்பிடுவது நல்லது என்று கருதுகிறேன்.

சோவியத் நாட்டிலிருந்து ஒருபெரிய கப்பல் வந்தது. அதில் இருந்த மாலுமிகளும் பணியாளர்

விஷம் குறைந்து மனிதனிடம் அமுதம் அதிகம் ஆகவேண்டும். அதுபோல அரசியல் கட்சிகளிடம் அழிவு சக்தி குறைந்து ஆக்க சக்தி அதிகம் ஆகவேண்டும். இப்படி ஒவ்வொரு துறையிலும் இருக்க வேண்டும்" என்று அண்ணா சொல்லி இருக்கிறார்.

நான் இங்கே மேடைக்கு வரும்போது என்னிடம் வெங்கடாசலபதி படமும் லட்சுமி படமும் தந்தார்கள்.

கடவுள் நம்பிக்கைக் கொண்டவர்களிடம் கொடுத்தால் இவைகளை பூஜை அறையில் வைத்து மாலை அணிவித்து புனிதமாக பூஜை செய்வார்கள்.

இந்தப் படத்திற்குக் கீழே ராஜாபீடிவிளம்பரம் இருக்கிறது. இது கேவலம் இல்லையா?

கடவுளை வியாபாரப் பொருளாக ஆக்கலாமா? காந்தி படம் போட்டு கள்ளைக் குடி என்று அதில் எழுதினால் எப்படி சரியாகும்?

இப்படி பீடி விளம்பரம் தேவையா? பிழைப்புக்காக கடவுள் படத்தையா போடவேண்டும்?

### பீடிக்கு கடவுள் பெயரா?

இதை மாணவர்கள் கேட்க மாட்டார்களா? பீடி விளம்பரத்திற்காக கடவுள் படம்போடலாமா என்று கேட்க மாட்டார்களா? இப்படிக் கேட்டால் அவர்களை சுயமரியாதைக்காரன் என்று சொல்வார்கள்.

இப்படிப்பட்ட நிலையில் தான்பிரச்சினைகள்எழுகின்றன.

எது எதற்கு எப்படி மரியாதை தரவேண்டுமோ அப்படி மரியாதை தந்தால் எந்தப் பிரச்சினையும் வராது.

காவடி ஆடுவது நல்ல கலை. முன்பு எல்லாம் நோன்பு இருந்து எடுத்த காலம் இருந்தது. இப்படிப்பட்ட காவடிகளால் தான் நொண்டிச் சிந்து போன்ற பாடல்கள் உருவாகியிருக்கின்றன.

இந்தக் காவடி ஆட்டத்திற்கு வாசிக்கும் வாத்தியத்தை மிருதங்கத்தில் கற்க ஆசைப்படுகிறார்கள். அந்த அளவில் இது இருக்கிறது.

இப்படிப்பட்டகிராமியக் கலைக்கு உத்தரவாதம் இருக்கிறதா?

### தொழில் துவக்க உதவி

ஆகவே இப்படிப்பட்ட கலைஞர்கள் இந்த தொழிலோடு ஒரு உப தொழிலையும் நடத்த முன் வர வேண்டும்.

ஓய்வு காலத்தில் வறுமையில் வாடாமல் இருக்க இது உதவும். இப்படி உப தொழிலைத் துவங்க அரசு கடன் உதவி அளிக்கும். (பலத்த கைதட்டல்)

புகழ் இருந்தால் யாரும் தேடி வருவார்கள். புகழ் இல்லாவிட்டால் யாரும் வரமாட்டார்கள்.

சினிமாவில் கூட ஒரு படம் வெற்றிபெற்றுவிட்டால் "ஸ்டார்" ஆகி

(2-ம் பக்கம் பார்க்க)